தலின் மனத்தூய்மையின் பொருட்டுக்கருமங்களைச்செய்தபோதினும் பரமேசுரகிருபையின் வயத்தால் கருமபலத்தைவிடின் அவனும் தியாகியே யாவன்; அதாவது கருமகருத்தா அஞ்ஞானி உண்மையாயத்தியாகியாயினும் துதியின்பொருட்டுத் தியாகசப்தம் கௌணி விருத்தியானே தியாகியெனக் கூறப்பெறுவன். முற்றினுங் கருமத்தியாகமோ தேகாபிமானமற்ற பரமார்த்த தரிசியே செய்யத்தக்கதனுவனுதலின், அத்தகைய தத்துவவேத்தாவே தியாக சப்த முக்கிய விருத்தியானே தியாகியெனப்படுவன். ஈண்டு, ‘𑌯𑌸𑍍𑌤𑍁’ என்னும் வசனத்திலிருக்கும் துசப்தம் கருமபலத்யாகியின் துர்லபத்தன்மையை யுணர்த்தும்பொருட்டாம்; அதாவது பலேச்சையை விடுத்து உளத்தூய்மைப்பொருட்டு நித்தியகருமங்களைச்செய்யும் புருடனும் துர்லபனே யாவன். (11)

(அ-கை.) ஹே பகவன்! தேகாபிமான முடைய பரமான்மஞானமற்ற கருமியும் பலேச்சையிலாத மாத்திரையானே கௌண சங்யாசியெனப்படுவன்; தேகாபிமான மற்ற பரமான்மஞானமுற்ற பலசகித சர்வ கருமத்தியாகியாகிய தத்துவவேத்தாவோ முக்கிய சங்யாசியெனப்படுவன் என முற்சுலோகத்தில் தேவரீர் திருவாய் மலர்ந்தருளினீர். ஆண்டுக் கௌண சங்யாசியின் பலத்திலும் முக்கிய சங்யாசியின் பலத்திலும் யாது விசேடமாகும். விசேட அலாபத்தான் கௌணத்தன்மையும் இலாபத்தான் முக்கியத்தன்மையும் சங்யாசியின் பாலெய்துமன்றோ, கருமபலத்தியாகித்தன்மையோ அவ்விருவர்பாலும் சமமேயாமாதலின் அதனானும் சிறப்புச் சம்பவியாதாம்; மற்றோ, இதனினும் வேறொரு விசேடமே கூறியருளல்வேண்டும் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

சு-ம். 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌮𑌿𑌷𑍍𑌟𑌂 𑌮𑌿𑌶𑍍𑌰𑌂 𑌚 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌫𑌲𑌮𑍍 ।
𑌭𑌵𑌤𑍍𑌯𑌤𑍍𑌯𑌾𑌗𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌨 𑌤𑍁 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 ॥ (12)

ப-ம். 4 𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌂 5 𑌇𑌷𑍍𑌟𑌂 7 𑌮𑌿𑌶𑍍𑌰𑌂 6 𑌚 8 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 3 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 9 𑌫𑌲𑌂 10 𑌭𑌵𑌤𑌿
1 𑌅𑌤𑍍𑌯𑌾𑌗𑌿𑌨𑌾𑌂 2 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 14 𑌨 11 𑌤𑍁 12 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 13 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கௌண சங்யாசிகட்கோ மரணத்தின் பின்னர்க் கருமங்களின் அநிஷ்ட, இஷ்ட, கலப்பு, என்னும் மூவகைப்பயன் அடைவுறும்; முக்கிய சங்யாசிகட்கோ ஒருகாலும் அத்திரிவித பலமடைவுறுதாம். (12)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கருமங்களின் சுவர்க்காதி பலத்தியாகவானாயினும் கருமங்களை யனுஷ்டிப்பவனும், ஆன்மஞானத்தின் முயல்பவனும், அதை யடையாதவனுமாகிய அத்தியாகியென்னும் கௌண சங்யாசிக்கு ஆன்மஞான இச்சையாகிய விவிதிஷையுண்டாம் வரை மனத்தூய்மையைச் சம்பாதியாது முன்னரே சரீரம் நீங்குமாயின் அவன் மரித்தபின் முன்செய்த கருமத்திற்குச் சரீரக் கிரகணரூப பலத்தை யவசியமடைவன். ஈண்டு, ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑌃’ என்னும் பதத்தானே ஒரே கருமம் கூறப்பட்டிருப்பினும் அவ்வொன்றில் 3 வகைப் பலஜனகத்தன்மை சம்பவியாதாம். ஆகையால், ‘𑌕𑌰𑍍𑌮𑌣𑌃’ என்னும் பதம் கருமத்வ ஜாதிவிசிஷ்ட புண்ணியம் பாவம் கலப்பென்னும் மூவகைப்பரியாய கருமங்களின் வாசகமாம். சரீரக்கிரகணரூப கருமபலம் காரணரூப கருமங்களின் மூவகைத்தன்மையானே அநிஷ்டம் இஷ்டம் மிசிரம் என மூவகைத்தேயாம். பாவத்திற்கு நிஷ்டபலமாம், புண்ணியத்திற் கிஷ்டபலமாம், இரண்டிற்கும் மிசிரபலமாம். இத்தேகம் எனக் கடையாதெதாழிகவென்னும் பிரதிகூலத்தன்மையின் ஞானவிஷயம் நகராயாதி பரியந்த திரியக்குத் தேகமாம்; அது அநிஷ்டபல மெனப்படும். இத்தேகமெனக் கடைவுறுகவென்னும் அனுகூலத்தன்மை ஞானவிடயம் தேவதாதேகமாம்; இஷ்ட

பலமாம். பாவ பல புண்ணியபலத்தோடு கூடிய மநுடாதி தேக அடைவு மிசிர பலமாம் 'அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரஞ்ச' என்னும் வசனத்தானே அக்கருமபலத்தில் மூவகைத்தன்மை சித்தமாமாதலின் மீண்டும் திரிவிதமெனக்கூறல் அசங்கதமாம்; ஆயினும், திரிவித சப்தத்தானே மீண்டு மப்பயனை மூவகைத்தென அனுவாதித்தது அம்மூவகைப் பயனைத தியாகிக்கும் பொருட்டாம்; அதாவது முமுக்ஷுக்கள் அம்மூவகைப் பயன்களையும் தியாகிக்குக என்பதாம். இதுகாறுங் கௌண சந்நியாசிகள் மரித்த பின்சரீரத்தை யடைவர்கள் என்பது கூறியருளலாயது. இப்போது முக்கிய சந்யாசிகட்கோ, பிரஹ்ம சாக்ஷாத்காரத்தானே காரியசகித அவித்தை நீங்கவே விதேககைவல்லிய ரூபமோக்ஷமே கிடைக்கும் என ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—'ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித்' விதிப்படி சருவ கருமங்களையும் விட்டவரும், யான் பிரஹ்மரூப மென்னும் பரமான்ம சாக்ஷாத்காரத்தானே கூடியவருமாகிய பரமஹம்ச பரிவிராஜகமுக்கிய சந்யாசிகள் மரித்து பின்னுரைத்த அநிஷ்ட இஷ்டமிசிரபலத்தை எத்தேயத்தும் எக்காலத்தும் அடையார்கள்; என்னை, அவர்கட்கான்ம சாக்ஷாத்காரத்தானே அஞ்ஞான நீக்கமேயாய் விடுகின்றதன்றே. அஞ்ஞானமகலவே அதன் காரிய சர்வ கருமங்களும் நீங்கியே போம். பிறப்பினடைவில் அஞ்ஞானமும் அஞ்ஞான ஜன்னிய கருமமுமே காரணமாம். அவை நீங்கவே பிறப்பெங்ஙனுண்டாம். இது சுருதியிலுமுளது :—

> பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ்சித்யந்தே ஸர்வஸம்ஶயா: ।
> க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ॥

(பொ-ள்.) முன்போல். இதனை ஸ்ரீ வியாசபகவானும் அருளியுள்ளார் :—

> தததிகம உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ தத்வ்யபதேஶாத் ।

(பொ-ள்.) பிரத்தியக்கபின்ன பிரஹ்மசாக்ஷாத் காரமுளதாக வேதத்துவவேத்தாவின் பூர்வசஞ்சித கருமமோ விநாசமாம், பின்னர்ச் செய்த கருமம் தீண்டவேமாட்டாது, இப்பொருள் சுருதி மிருதிகளிலும் கூறப்பட்டுளது. என்பதாதி சுருதி சூத்திரவசனம் பரமான்ம ஞானத்தானே சர்வ கருமங்களின் நாசத்தைக்கூறுயுளதாதலினிது துணியப்பெறும் :—முன் மொழிந்த கௌண சந்யாசிகட்கோ முற்புண்ணிய பாவகரும வயத்தால் மீண்டும் சரீரக்கிரகணரூப சம்சாரம் அவசியமுண்டாம். முக்கிய சந்யாசியாகிய தத்துவ வேத்தாவிற்கோ அவித்தை முதலியவையின்மையின் மீண்டும் சம்சாரமடைவுறாதாம்; மற்றோ, மோக்ஷமே யடைவுறும். இவ்வகை யிவ்விரண்டினும் பலவிசேடமாம். சிலவாதியர்கூறுவதாவது :—'அநாஶ்ரித: கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய: ஸ ஸந்ந்யாஸீ' என்பதாதி வசனங்களில் கருமபலத்தியாகத்தானே கருமமாற்றும் கருமியின்பாலும் சந்யாசியென்னும் சப்தம் பிரயோகிக்கப்பட்டுளதாதலின் 'ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித்' என்னும் வசனத்தினும் சந்யாசி சப்தத்தானே கருமபலத்தியாகம் செய்த கருமியையேகொள்க, அன்றியும், முன்மொழிந்த அநிஷ்ட இஷ்ட மிசிரமென்னும் மூவகைப்பலத்தைச் சந்யாசிகளிடத்தே நிஷேதஞ்செய்யப்பட்டதும் சாத்விக கருமிகள் பாற்சம்பவிக்கும்; என்னை, நித்தியநைமித்திக கருமங்களைச்செய்யாமல், நிஷித்த கருமங்களைச்செய்தலின் உண்டாம் பாவ உற்பத்தி, சாத்விககருமிகட்கு அவற்றை முறையே செய்தலின் செய்யாமையின் உண்டாகாதாம். ஆகையா லநிஷ்டபலப்பிராப்தியுண்டாகாதாம். அவர்கள் காமிய கருமத்தைச் செய்யாமையின், ஈசுர அர்ப்பணமதியானே பலபரித்தியாகஞ்செய்தலின் இஷ்டபலப்பிராபதியுமுண்டாகாதாம். இதனானே கலப்புப்பலமுமுண்டாகாதாம். இம்முறையே சாத்விக கருமிகட்கு மூவகைப்பயனு முண்டாகாதாம். இது பற்றியே சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுளது :—

மொக்ஷாமீ ந ப்ரவர்த்தேத தத்ர காம்ய நிஷித்³த⁴யொ: ।
நித்யநைமித்திகே குர்யாத் ப்ரத்யவாய ஜிஹாஸயா ॥

(போ-ள்.) முமுக்ஷு, காமிய கருமத்திலும் நிஷித்த கருமத்திலும் பிரவிருத்தியான்; மற்றோ, எவற்றைச்செய்யாமையானே பிரத்தியவாயமுண்டாமோ அந்தப் பிரத்தியவாய மகற்று மவாவினனா யந்நித்திய நைமித்திகங்களைச் செய்வன். இத்துணை மாத்திரையானே சமுசார அபாவமாம். இங்ஙன் ஏகபவிக வாத ரீதியாய் ஸ்ரீ பகவானது வசனத்திற்கு வியாக்கியானம் செய்பவர்பொருட்டு இது கூறுதல்வேண்டும்:—சப்தத்தின் அர்த்தத்தின் மரியாதையை நீ நிண்ணயஞ் செய்திலைபோலும்; எதனானே ஸ்ரீ பகவான் வசனத்திற்கு நீ யிவ்வகை வியாக்கியானஞ்செய்கின்றனையோ:—ஈண்டுக்கௌண முக்கிய அர்த்தமத்தியில்யாதொரு பாதகமுமிலதாகவே முக்கியப் பொருளின்கண்ணே சாப்தபோதமுண்டாம், இஃதோசப்தமரியாதையாம். ஈண்டுப் பிரசங்கத்தில் மலசகித சர்வ கருமங்களின் தியாகியோ சந்யாசி சப்தத்திற்கு முக்கியப்பொருளாம், முக்கிய சந்யாசியின் கண்ணே கருமபலத்தியாகித் தன்மையிருப்பதேபோல நிட்காமகருமி புருடனிடத்தும் பலத்தியாகித் தன்மையிருக்குமாதலின், அத்தன்மை வடிவசமான குணத்தைக்கொண்டு அச்சப்தம் கருமியின்பாலும் முயலுமாதலின் அவன் அதன் கௌண அருத்தமாம். ‘ந தே³ஹம் ந ப்ராணிநாம் க்வசித்’ என்பதிலிருக்கும் சந்யாசி சப்தத்திற்கு முக்கியப் பொருள் கொள்வதில் யாதொருபாதகமுமின்றாமாதலின் முக்கியப்பொருளையே ஈண்டுச் சந்யாசி சப்தத்தாற் கோடல் தகுதியாம். இப்பொருள் சப்தமரியாதையிற் சித்தமாம். காரண சாமக்கிரியிருப்பக்காரிய உற்பத்தியவசியமுண்டாம்; இது அர்த்த மரியாதையெனப்படும், இதனானும் ஆம் முன்னறைந்த பொருளே துணிபாம். அஃதாமாறு:—ஈசுரார்ப்பணபுத்தியானே கருமபலத்தை விடுத்தவனும், மனத்தூய்மையின் பொருட்டு நித்தியகரும அனுஷ்டானஞ் செய்பவனும் ஆகியோன் மனத்தூய்மையவாயிலாய் ஞான நிஷ்டையையடையாமல் மத்தியின் மரிப்பனேல் பூர்வபுண்ணிய பாவ வயத்தானே மூவகைச் சரீரக்கவர்ச்சி வடிவச் சம்சார ஆவட்டவை யெவனானும் நீக்கமுடியாதாம். புண்ணிய பாவவடிவகாரண மிருப்பச் சரீரக்கிரகணவடிவ காரியமவசியமுண்டாம் ஆன்ம ஞானமிலாதவன் அவசியம் அறமறவயத்தாற் பிறப்பன். இது சுருதியினும் கூறப்பட்டுளது:—‘யோவா ஏதத³க்ஷரம் கா³ர்க்³யவிதி³த்வாஸ்மால்லோகாத் ப்ரைதி ஸ க்ருபண:’ ஹே கார்க்கி! இவ்வக்ஷரத்தை யறியாமல் இம்மநுடலோகத்தினின்றும் செல்வோனே அவனைக்கிருபணனென்றேயறி. ஆகையால், மனத்தூய்மையின் பலபூத ஆத்மஞான முண்டாதற் பொருட்டு நிட்காமன் மநுட சரீர அடைவையவசியம் அங்கீகரிக்கவேண்டியதேயாகும். இது பற்றியே முன்னாறாவது அத்தியாயத்தில் ‘ஶுசீநாம் ஶ்ரீமதாம் கே³ஹே யோக³ப்⁴ரஷ்டோ(அ)பி⁴ஜாயதே’ என்பதாதி வசனங்களானே இப்பொருள் நிர்ணயிக்கப்பட்டது. மனத்தூய்மையின் பின்னர்ச் சாஸ்திரவிதி பூர்வகம் மலசகித சர்வ கருமங்களையும் பரித்தியாகஞ்செய்தவனாகிப் பிரஹ்மவேத்தாவாய குரு சமீபத்திற் சென்று அவர் வாயிலாய் வேதாந்த சிரவணஞ்செய்பவன் இடையில் மரித்திடின், ஆன்மஞானத்தை யடையாத அந்த யோகப்பிரட்டனாகிய விவிதிஷா சந்யாசியானவன், போகேச்சையுடையனேல் ஸ்ரீமான்கள் வீட்டில் பிறப்பன். போகேச்சையில்லனேல் பிரஹ்மஞானிகள் வீட்டில் பிறப்பன். என்னுமியாவும் முன்னருரைப்பட்டது. இதனை விக்கைமுதிக நியாயம் சித்தமாம்:—ஆன்ம ஞான மற்ற சர்வ கருமத்தியாகியாகிய விவிதிஷை சந்யாசிக்கும் சரீரக்கிரகண மவசியமுண்டாமேல் ஆன்ம ஞானமற்ற கருமிக்கு அஃதுண்டாமென்பதிற்கூறவேண்டிய தென்னை யென்ப

தாம். ஆகையால், அஞ்ஞானிக்குப் பூர்வ கருமவயத்தால் சரீரக்கிரகணமின்றி யமையாதுண்டாம். இஃதர்த்தமரியாதையானே சித்தமாம். ஆகையால், 'ந து ஸம்ந்யாஸிநாம் க்வசித்' என்பதிலுள்ள சந்யாசி சப்தத்தானே நிட்காம கருமியையேகவர்க என்னும் ஏகபவிகவாதிகளின் வியாக்கியானம் முற்றினுமசங்கதமாம்; முன்மொழிந்த ஸ்ரீமத் பாடியக்காரர் முதலியோரது வியாக்கியானமே சிறந்ததாம். இச்சுலோகத்தில் ஸ்ரீபகவானது திருக்கருத்திதுவாம் :—அகர்த்தா, அபோக்தா, பரமாநந்த, அத்விதீய, சத்திய, சுவப்பிரகாசமாகிய பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்ம சாக்ஷாத்காரம் நிர்விகற்பமும், மகாவாக்கிய ஜன்னியமும், விசாரத்தானே நிச்சயிக்கப்பட்ட பிராமாண்யமுடையதும், எல்லாவகையானும் அப்பிராமாணிய சங்கையற்றதும் ஆம். அதனுல், அஞ்ஞானம் நீங்கும், நீங்கவே, அதன் காரிய கர்த்திருத்துவாதி அபிமானமற்ற உண்மையாயமுக்கிய சங்யாசியோ அவித்தையோடுகூடிய சர்வ கரும அழிவானே கேவலம் சுத்த சொரூபனுகி அந்திமித்தக சரீரக்கவர்ச்சியைமீண்டு மொருகாலுமடையான்; தத்துவ வேத்தாவின் சர்வமயல்களும் அவித்தையாகிய காரணங்கெடவே கெடலினுமென்க, அவித்தையுடையவனும், கர்த்திருத்துவாதியபிமான முடையவனும், தேகபிருந்தும் ஆயவனே முவகையினனுவன்; இராகத்துவேஷதோஷ மகிமையானே தன்னிச்சையானே காமிய கருமத்தையும் நிஷித்த கருமத்தையும் செய்யும் மோக்ஷ சாஸ்திர அநதிகாரி முதலாமவனுவன். பூர்வஞ்செய்த புண்ணிய கரும வயத்தானே சிறிது மாத்திரம் நட்டமடைந்த இராகாதியையுடையவனும், விதி பூர்வகம் சர்வ கரும பரித்தியாகம் செய்வதில் அசமர்த்தனுயினும், நிஷித்த காமிய கருமங்களைப் பரித்தியாகஞ்செய்து மனத்தூய்மைப் பொருட்டுப்பல இச்சையைப் பரித்தியாகித்து நித்திய நைமித்திகங்களையே செய்பவனும், மோக்ஷசாஸ்திர அதிகாரியாய கௌண சங்யாசியும் ஆகியோன் இரண்டாமவனுவன். நித்திய நைமித்திக அனுஷ்டானஞ்செய்து மனத்தூய்மைபெற்றபின் விவிதிஷையடைந்தவனும், சிரவணுதி சாதனங்களானே மோக்ஷ சாதனரூப ஆன்ம ஞான சம்பாதனஞ்செய்யும் வேட்கையனும், சாஸ்திரவிதி பூர்வகம் சர்வ கரும பரித்தியாகத்தான் வேதாந்த சாஸ்திர விசாரப்பொருட்டுச் சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட குருவின் சரணத்தையடைந்தவனும் ஆகிய விவிதிஷா சந்யாசி மூன்றுமவனுவன். ஆதியனுக்குச் சம்சாரித் தன்மை வெளிப்படையேயாம். மற்றையனுக்குச் சம்சாரித்தன்மை அநிஷ்ட மிஷ்டமிசிரமுமென்பதனுனே யருளப்பட்டது, ஈற்றவனுக்குச்சம்சாரித்தன்மை ஆறுவதத்தியாயத்தில் 'ஜயதி: ஸ்ருஜயொவெத:' என்பதாதி வசனத்தானே விளக்கிளப்பி நிண்ணயித்தருளப்பட்டுளது. ஆகையால் அவித்தையாதி காரணமிருப்ப அஞ்ஞானிக்குச் சம்சாரித்தன்மை யின்றியமையாதாம்; ஒருவனுக்கோ ஞானப்பிரதிகூல சரீர மூண்டாம். ஒருவனுக்கோ ஞானனுகூல சரீர முண்டாம். இத்துணை விசேடமாம். தத்துவ வேத்தாவோ அவித்தை முதலிய சம்சாரகாரண மபாவமாதலின் தானுகவே கைவல்லிய மோக்ஷவடைவாம் என்பதாக ஸ்ரீ பகவானிச் சுலோகத்தில் இரண்டையும் குறிப்பித்தருளினர். (12)

(அ-கை.) ஆண்டான்ம ஞானமற்ற அஞ்ஞானியின் சம்சாரித்தன்மையில் கரும பரித்தியாக அசம்பவரூப ஹேது 'ந ஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத:' என்பதால் முன்னர்க் கூறப்பட்டது. அவ்வஞ்ஞானியின் கருமத்தியாக அசம்பவத்தில் யாது ஹேதுவாம்; அதாவது, எவ்வேதுவினுனே கருமத்தியாகஞ் செய்யமுடியாதவனுகின்றான். என அர்ச்சுனனுக் கறியுமவாவா, கரும ஹேதுபூத அதிஷ்டாணுதி ஐந்தனுள் அஞ்ஞானிகளின்றுதான்மிய அபிமானமே கருமத்தியாக அசப்பவத்திலேதுவாம் என்னும் பொருளை யிப்போது ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களால் வருணித்தருளுகின்றார். அவ்வைந்தும் வேதாந்த

சாஸ்திரத்தைப் பிரமாணமாகவுடையதாம், அவற்றை நீக்கும்பொருட்டு இன்றிய மையாதுணரத்தக்கதாமென்னும் பொருளை முதற் சுலோகத்திலருளிச்செய்கின்றார் :—

சு-ம். வஂசெஉாநி ஊஹாபாஹொ காரணாநி நிபொய செ ।
ஸாஂவெஹ்ரு கூர தாஞெ வொ்ராக்தாநி ஸிஂஃயெ ஸவ-ஃகூஉ-ஃணாஂ ॥ (13)

ப-ம். 5 வஂசு 4 ஊஉாநி 1 ஊஹாபாஹொ 6 காரணாநி 8 நிபொய 7 செ 10 ஸாஂ வெஹ்ரு 9 கூர தாஞெ 11 வொ்ராக்தாநி 3 ஸிஂஃயெ 2 ஸவ-ஃகூஉ-ஃணாஂ.

(அ-ம்.) ஹே மகாபாகுவையுடைய அர்ச்சுன! சர்வ கரும சித்தியின்பொருட்டுக் கூறப்புகும் அதிஷ்டானுதி 5 காரணங்களை எமது மொழியால் நிச்சயஞ்செய்தி. அவை சர்வ கரும சமாப்தியையுடைய வேதாந்த சாஸ்திரத்தில் கூறப் பட்டுளது. (13)

(வி-ம்.) ஹே பெருந்தோளுடைய அர்ச்சுன! இலௌகிக வைதிக கரும சித்தியின்பொருட்டுக் கூறப்படும் அதிஷ்டானுதி ஐந்து காரணங்களைச் சர்வஞ்ஞ பரமேசுரராகிய நமது வசனத்தானிச்சயஞ்செய்தி; அதாவது, அவ்வைந்தின் வடிவத்தையுணர நீ சாவதானனுகியிருத்தி. அவை முற்றினும் அறியத்தகாத தல்ல; மற்றூ, ஒருமைமனத்தனு லுணரத்தக்கனவேயாம். அவற்றை யறிவான் மனத்தை யொருமைப்படுத்தி ஸ்ரீ பகவான் அவ்வைந்தையும் துதித்தருளினர். ஹே மகாபாகோ என்னும் விளியால் அவற்றின்றுதியின்பொருட்டு இப்பொருள் குறிப்பிக்கப்பட்டது : இவ்வைந்தையு முணர்வதில் மகாபராக்கிரமமுடைய சிரேஷ்ட புருடனே சமர்த்தனுவன் அசிரேஷ்டன் சமர்த்தனுகான். நீயு மேன்மை மிக்கவனுதலின் அவற்றை யறிவதிலாற்றலுடையவனுவாய். அவ்வைந்தும் தேவரீரது திருவாக்காலறியத்தக்கனவேயோ? அல்லது, அவற்றில் வேறு பிரமாணமு முளதோ? என ஸ்ரீ பகவான்றமது திருவாக்கில் நம்பிக்கையுண்டாக்கும்பொருட்டு வேதாந்த சாஸ்திரப் பிரமாணத்தை யவற்றிலருளுகின்றார். 'ஸாஂவெஹ்ரு கூர தாஂதெ வொ்ராக்தாநி' அவை கிருதாந்தரூப சாங்கிய சாஸ்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றன. ஆண்டுப் பிரஹ்மாநந்தரூப நிரதிசய புருஷார்த்த அடைவின்பொருட்டும், ஜன்மமரணுதி சர்வ அநர்த்த நிவிருத்தியின்பொருட்டும் அறியத்தக்கதாகிய ஜீவபிரஹ்ம ஒருமை யுணர்ச்சிக்குபயோகிபாய சிரவணுதி சாதனமென்பதாதி பதார்த்தங்களைக்கூறும் சாஸ்திரம் சாங்கியமாம்; உபநிஷத்வடிவமென்பதாம். அதன்கண்ணவ்வைந்துங் கூறப்பட்டுள்ளன. கேவல ஆன்மவஸ்து மாத்திரத்தைப் பிரதிபாதிக்கும் வேதாந்த சாஸ்திரத்தில் உலகப்பிரசித்த அனுன்மாவாகிய அவஸ்துவடிவப் பஞ்ச கருமகாரணம் பிரதிபாதித்திருத்தல் என்னை? என அர்ச்சுனன் வினவ ஸ்ரீ பகவான் வேதாந்த சாஸ்திரத்தை விசேடித்தருளுகின்றார். 'கூர தாஂதெ' என முயல்வாற் செய்யப்படுவது கிருதமாம் என்னும் விற்பத்தியானே கிருதசப்தம் சர்வ கருமவாசகமாம். அவற்றின் முடிவுபெறு ஆன்மஞான உற்பத்தியால் எதன்கண்ணது கிருதாந்தமாம். அல்லது, 'நிக்ஷுஂ நிஸ்ரியஂ ஸாஂதஂ'

என்பதாதி வசனத்தானே, கிருதம்-வெளிப்படுத்தப்பட்ட, அந்தம்-ஆன்மானன்மா விரண்டிற்கும் தத்துவ நிச்சயம் எதன்கண்ணதோ அது கிருதாந்தமாம். அல்லது, வேதப் பிரதிபாதித நித்திய நைமித்திக கருமம் கிருதமாம், அவற்றின் அந்தம் பரித்தியாகம் எச்சாஸ்திர சிரவணப்பொருட்டாமோ அது கிருதாந்தமாம். ஆண்டு, 'ஸஂநதீ ஸ்ரீஸாவணஂ கூயஃரா' என்னுங் சுருதி வேதாந்த சாஸ்திர சிரவணப்பொருட்டுச் சர்வ கரும சந்நியாசத்தைக் கூறுகின்றது. அத்தகைய வேதாந்த சாஸ்திரத்தில் அவ்வைபைந்துங் கூறப்பட்டுள்ளன;

அதாவது உலகிற் பிரசித்தமாகிய அனான்மவஸ்து அவ்வைந்தும் மயவுணர்ச்சியாலாய அத்தியாரோபத்தானே உலகர் ஆன்மரூபமாய்க் கவர்ந்துளார். அவ்வைந்தையும் ஆன்மதத்துவ ஞானத்தானே பாதஞ்செய்யும்பொருட்டுப் பரித்தியாச்சியரூபத்தால் வேதாந்த சாஸ்திரம் விளம்புகின்றதேயல்லாமல் அவற்றைக் கூறுவதிற் கருத்தின்றாம், அத்விதீய ஆன்மாவைக் கூறுவதன்கண்ணே அதற்குக் கருத்தாம். கருத்திதுவாம்:—தேகாதி யநான்மபதார்த்தங்களின் தருமரூப கருமமே அசங்க ஆன்மாவின்கண் ணவித்தையானே அத்தியாரோபிதமாம் உண்மையிலின்றாம். இவ்வாறு வேதாந்த சாஸ்திரம் ஆன்மாவின் வாஸ்தவவடிவப் பிரதிபாதனஞ்செய்கின்றபோது சுத்த ஆன்மஞானத்தானே அத்தியா ரோபித கருமம் பாதமாதலின், சர்வ கருமங்களின் அந்தஞ்செய்யப்படும். அதிஷ்டான ஆன்ம ஞானமின்றி வேறெவ்வுபாயத்தானும் கருமாந்தஞ் செய்ய முடியாதாம். இதனானே அசங்க ஆன்மாவின்கண்ணக் கரும அசம்பந்தத்தைப் பிரதிபாதிக்கும்பொருட்டு மாயாகற்பித அநான்மபூத பஞ்சகரும காரணம் வேதாந்த சாஸ்திரத்திலனுவதிக்கப்பட்டுளதாமன்றி அதைப் பிரதிபாதிப்பதிற் கருத்தின்றாம். ஆகையால், அத்வைத ஆன்மாமாத்திரத்திற் கருத்தாம்; அக்கருத்திற் கிண்டானியுண்டாகாதாமாதலின், ‘க்ருதாந்தே’ என்னும் சிறப்பானே ஸ்ரீ பகவான் வேதாந்த சாஸ்திரத்தில் கருமாந்தத்தன்மையை முன்னருளியது பொருத்தமுடையதேயாம். இதே பொருளை ஸ்ரீ பகவான் ‘ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே’ என்னும் வசனத்தானும் கூறியருளினர். ஈண்டு அநேகமூலப் புஸ்தகங்களில் ‘ஸாங்க்யே ஊதாநி, ஸாங்க்யே தாநி’ யெனவும் பாடமுளது; ஆனால், ஸ்ரீமத் பாஷ்யக்காரர், ஸ்ரீமது சூதனசரசுவதிசுவாமிகள், ஸ்ரீமந் நீலகண்ட பண்டிதர் ‘ஸாங்க்யே ஊதாநி’ என்னும் பாடத்தையே யங்கீகரித்து வியாக்யானித்துளார். ஆகையாலீண்டும் அப்பாடமே வைக்கப்பட்டுளது. (13)

(அ-கை.) ஆண்டு, வேதாந்த சாஸ்திரத்தைப் பிரமாணமாகவுடைய கரும பஞ்சகாரணம் ஆன்மாவிற் ககர்த்தாத்தன்மை சித்திக்கும்பொருட்டுப் பரித்தியாச்சியரூபத்தானே அறியத்தக்கதென்பது முன்னருளப்பட்டது. அவ்வைந்தும் யாவையென அறியும் வேட்கை அர்ச்சுனனுக்குண்டாக ஸ்ரீ பகவான் 2-வது சுலோகத்தால் அருளிச்செய்கின்றார்:—

சு-ம். அதிஷ்டாநம் ததா கர்தா கரணம் ச ப்ருதக்விதம் ।
விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥ (14)

ப-ம். 1 அதிஷ்டாநம் 2 ததா 3 கர்தா 6 கரணம் 4 ச 5 ப்ருதக்விதம் 8 விவிதா:
7 ச 9 ப்ருதக் 10 சேஷ்டா: 14 தைவம் 11 ச ஏவ 12 அத்ர 13 பஞ்சமம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அதிஷ்டானமும் கர்த்தாவும் நானாவகையாய காரணமும், நானாவகையாய பின்ன பின்ன சேஷ்டையும், இக்காரணங்களில் ஐந்தாவதாகிய தைவமும் ஆகிய ஐந்தும் கருமகாரணமாம். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இச்சை, துவேஷம், சுகம், துக்கம், சேதனமென்பதாதி தரும அபிவியக்தியாசிரயரூப பஞ்சீகிருத பஞ்சபூதங்களின் காரியரூப தூலசரீரத்திற்கு அதிஷ்டானமெனப்பெயராம். யான் கருத்தாவென அபிமானமுடைய, ஞானசக்திப் பிரதான அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியரூபம் அகங்காரமாம். அது அந்தக்காணம் புத்திவிஞ்ஞானம் என வழங்கப்பெறும்; அது ஆன்மாவோடு தாதாத்மிய அத்தியாசத்தான் தன்பாலிருக்கும் கர்த்திருத்துவாதிகளை ஆன்மாவின்கண்ணாரோபிக்கும், அதுவே கர்த்தாவெனப்படும். ஈண்டு, ‘ததாகர்தா’ என்பதிலுள்ள ‘ததா’ என்பதனால் ஸ்ரீ பகவான் அக்கர்த்

தாவின்பால் முன்மொழிந்த சரீரரூப அதிஷ்டான ஒப்புமையைக் கூறியருளினர்; அதாவது, சரீரரூப அதிஷ்டானம் அநான்மாவும், ஆகாயாதிகளின் காரியமும், கனுப்பொருள்போல மாயையானுண்டாக்கப்படுவதுபோல; அகங்கார கர்த்தாவும் ஆம். ஈண்டு கருத்தாம்:—தூலசரீரத்தை லோகாயதிகன் ஆன்மரூபமாய்க் கவர்ந்தானெனினும் அன்னிய சாஸ்திர வேத்தாக்கள் அநான்மரூபமாகவே நிச்சயித்துளார்; அத்தகையதைக் கர்த்தாவில் திருஷ்டாந்தமாகக் காட்டியபோது தார்க்கிகன் ஆன்மரூபமாய்க் கவர்ந்த கர்த்தாவில் அநான்மரூபத்தன்மை நிச்சயம் மிகவுமெளிதென்பதாம். அபஞ்சீகிருதங்களினின்று முண்டாய, சப்தாதிவிடய உபலப்தியின் சாதனரூப சுரோத்திராதி இந்திரியங்கரணமாம். அது பிருத்தக் விதமாம்; அதாவது, ஞானேந்திரியம் கருமேந்திரியம், மனம், புத்தி, என்னும் பன்னிருபேதத்தானே நானுவகையாம். சாஸ்திரத்தில் மனுதி நான்கையே அந்தக்கரணபேதத்தானே அறைந்திருந்தபோதினும் கரணவர்க்கத்திலிருக்கும் மனம் புத்தியிரண்டும் அகங்காரவிருத்தி விசேஷமாய்க்கொள்க, அவ்விருத்திகளோடுகூடிய அந்தக்கரணரூப அகங்காரமோ கேவலம் கர்த்தாரூபமேயாம் கரணரூபமன்றாம். சேதனுபாசமோயாண்டுந் துல்லியமேயாம் அந்தக்கரணரூப அகங்காரத்தில் கர்த்தாத்தன்மை 'விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே' என்பதாதி சுருதிகளில் பிரசித்தமேயாம். ஈண்டு, 'கரணஞ்ச' என்பதிலிருக்கும் அகாரம் பூர்வ வசனத்திலிருக்கும் 'ததா' என்பதையனுவிருத்தி செய்யும்பொருட்டாம்; அதாவது, முன்மொழிந்த சரீரரூப அதிஷ்டானம் அகங்காரரூப அதிஷ்டானம் அகங்காரரூப கர்த்தா அநான்மரூபமும் பௌதிகமும் கற்பிதமுமாவதேபோல இப்பன்னிருவகைக் கரணமும் ஆம். கிரியாசக்திப் பிரதானமாகிய அபஞ்சீகிருதங்களின் காரியரூபமும், கிரியைப் பிரதானத்தன்மை ரூபத்தானும் வாயவீயத்தன்மை ரூபத்தானும் கூறப்பட்டதுமாகிய பிராணுதி சேஷ்டையாம். அவையநந்தவிதமாம்; அதாவது, பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், என ஐவகையாம்; அல்லது, நாகன், கூர்மன், கிருகலன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் ஐந்தையுங் கூட்டி 10 வகையாம். நாகாதியைந்தும் பிராணுதியிலடங்குவனவேயாமாதலின் அநேக இடங்களில் ஐந்து பிராணனே கூறப்பட்டுளது. அச்சேஷ்டை பிருத்தக்காம்; அதாவது ஸ்தானபேதத்தானே காரியபேதத்தானே பின்னபின்னமாம். ஈண்டு, 'விவிதாஸ்ச' என்பதிலிருக்கும் அகாரம் பூர்வ வசனத்திலிருக்கும் 'ததா' என்பதின் அனுவிருத்தியின்பொருட்டாம்; அதாவது, அறைந்த அதிஷ்டானம் கர்த்தா கரணம் என்னும் மூன்றும் அநான்மரூபமும் பௌதிகரூபமும், மாயாகற்பிதமும், ஆமாறு இச்சேஷ்டையுமாம். ஈண்டுச் சில அறிஞர் கூறுவதாவது:—துயிலின்கண்ணே கர்த்தாரூப அந்தக்கரணம் லயமாயினும் பிராண வியாபாரம் காணவருகின்றது, பற்பல இடங்களில் பிராணன் அந்தக்கரணத்தினும் வேறாகவே கூறப்பட்டிருக்கின்றதாதலின் இரண்டும் அக்கியந்தம் வேறென்பதேபோலவாம். சில சூக்குமதரிசிகள் கூறுவதாவது:—கிரியாசக்தியையுடையதும் ஞான சக்தியையுடையதும் ஆயவொரே அபஞ்சீகிருத காரியஞ்சேதனத்தைச் சீவனுக்கு முபாதியாம். அவ்வொரே காரியம். கிரியாசக்திப் பிரதானத்தானே பிராணனெனப்படும், ஞானசக்திப் பிரதானத்தானே அந்தக்கரணமெனப்படும், எனெனின், 'ஸம்ஸ்காரம் அக்னே ஹ்ருதயே தாஹம் ஆத்மாதே உத்தாம் தோஹவிஷ்ணுரீ ஹ்ருதி ப்ருதிவ்யே ப்ருதிஷ்டாம் யாவத்ராத்ரிம் ப்ராணஸம்ரக்ஷத' என்னுஞ் சுருதியில் உத்கிராந்தி கதி ஆகதிகளின் உபாதித்தன்மை பிராணனிடத்திற் கூறப்பட்டுளது. 'ஸவிஜ்ஞாநோ பவதி ஸவிஜ்ஞாநமேவாந்வவக்ராமதி' என்பதாதி சுருதிகளில் அவ்வுத்கிராந்தி முதலியவற்றின் உபாதித்தன்மை அந்தக்கரணரூப உபாதியின்கண்ணே கூறப்பட்டது. ஈண்டு ... நூதால்

பிராணன் அந்தக்கரணம் இரண்டுபாதிகட்கும் சுதந்திரமாகவே பேதயங்கீகரி
கின் ஜீவான்மாவிற்கும் பேதவடைவாம். ஜீவபேதஞ் சித்தாந்தத்தி லங்கீகா
மின்றுமாதலின் அந்தக்கரணம் பிராணன் என்னுமிரண்டிற்கும் ஏகரூபமாகவே
உத்கிராந்தியாதிகளின் உபாதித்தன்மை பொருத்தமாம். கூறிய பேதமோ
அவற்றின் ஏகபாவத்தின் கண்ணும் கிரியாசக்தி ஞான சக்திகளின் பேதத்
தானே சம்பவமாம். துயிலில் ஞான சக்திபாகமிலயமாயினும் கிரியா சக்தி
பாக தரிசனமோ அவற்றின் ஏகபாவத்தின்கண்ணும் முரணுறுதாம். திருஷ்டி
சிருஷ்டி இலபத்தில் சர்வ இலயமாயினும் பிராண வியாபாரமுடைய துயில்
வோனது தேகம் அன்னியரானே இவன் தூங்குகின்றனெனக் கற்பிக்கப்படு
கின்றது. ஆகையால் இருவகையானும் பிராணன் அந்தக்கரணம் என்னுமிரண்
டன்பேதம் கூறல் கூடியதேயாம். முற்கூறிய சரீரரூப அதிஷ்டான, அகங்கா
ரூபகர்த்தா, 12 வகையாயகரணம், பிராணதிரூப சேஷ்டை என்னும் யாவ
திற்கு மேலாகமுறையேயனுக் கிரகஞ்செய்யும் தேவதைகள் தைவமெனப்படும்
அது காரணவர்க்கத்தில் ஐந்தாவதாம்; அதாவது 5 என்னுஞ் சங்கையைப் பூ
ணஞ்செய்வதாம். ஈண்டு, 'தைவம் ச' என்பதிலிருக்கும் சகாரம் பூர்வ வசனத்
திலிருக்கும் 'ததா' என்னும் சப்தத்தின் அனுவிருத்திசெய்யும் பொருட்டாம்.
அதாவது, கூறிய அதிஷ்டானதிகளைப்போலத் தைவமும் அனன்மரூபமும்,
பௌதிகமும், மாயாகற்பிதமும், ஆம். ஆண்டுக்கர்த்தாகாரணம் சேஷ்டை என்னு
மூன்றற்கு மதிஷ்டானமாகிய சரீரத்திற்கோ பிருதிவி தேவதையாம்; ஏனெனின்
'யத்ராஸ்ய புருஷஸ்ய ம்ருதஸ்யாக்நிம் வாகப்யேதி வாதம் ப்ராணஶ்சக்ஷுராதி
த்யம் மநஶ்சந்த்ரம் திஶஃ ஶ்ரோத்ரம் ப்ருதிவீம் ஶரீரம்' என்னும் சுருதியில் வாக்கு
முதலியவற்றின் அதிஷ்டாதா அக்கினியாதிகளோடு சரீரத்தின் அதிஷ்டாதா
ரூபத்தானே பிருதிவிபடிக்கப்பட்டுளது. ஆகையால் இச்சுருதிப் பிரமாணத்
தானே சரீர ரூப அதிஷ்டானத்தின் தேவதை பிருதிவியே யெனத்துணியப்
பெறும். கர்த்தா ரூப அகங்காரத்திற்கு-ருத்ரதேவதையாம்; இது புராணதிக
ளிற் பிரசித்தமாம். இவ்வாறு சுரோத்திராதி காரணங்களின் தேவதையும்
வெளிப்படையேயாம். சுரோத்திராதிகட்கு முறையே திக்கு, வாத அருக்க, பிர
சேதா, அசுவினீ, என்னுமைந்தும் தேவதைகளாம்; வாக்காதியைந்திற்கு
முறையேவன்னி, இந்திரன், உபேந்திரன், மித்திரன், பிரஜாபதியென்னும் ஐவர்
தேவதைகளாம். மனமதிகட்கு மதியும் பிருகற்பதியும் தேவதைகளாவர். பிரா
ணதி ஐந்திற்கும் முறையே, சத்யோஜாத, வாமதேவ அகோர, தத்புருஷ, ஈசான
தேவதைகளாவர்கள். இது புராணதிகளில் வெளிப்படையேயாம். ஒருடைகயின்
கண்ணே தைவசப்தத்தானே தர்ம அதர்மங் கவரப்பெற்றுளது. (14)

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தில் அவ்வதிஷ்டானதி ஐந்து காரணங்
களின் சொரூபங் கூறியருளப்பட்டது இப்போது இம்மூன்றாவது சுலோகத்தால்
ஸ்ரீ பகவான் அவ்வைந்திலும் சருவகரும காரணத்தன்மையைக் கூறியருளு
கின்றார்.

சு-ம். ஶரீரவாங்மநோபிர்யத் கர்ம ப்ராரபதே நர: ।
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥ (15)

ப-ம். 2 ஶரீரவாங்மநோபி: 3 யத் 7 கர்ம 8 ப்ராரபதே 1 நர: 4 ந்யாய்யம்
5 வா 6 விபரீதம் வா 11 பஞ்ச 10 ஏதே 9 தஸ்ய 12 ஹேதவ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இப்புருடன் சரீரவாக்மனமெனு மூன்றால்
அறத்தையேனும் மறத்தையேனும் தொடங்குவன். அவ்வியாவற்றிற்கும் அதிஷ்
டானதியைந்துமே காரணரூபமாம். (15)

(வி-ம்.) ஆண்டுத் தேகத்தாலாயது வாக்காலாயது மனத்தாலாயது என விதி நிஷேதரூப 3 வகையே கருமம் தருமசாஸ்திரத்திற் பிரசித்தமாம். 'ஸ்ரவ்ருத்திஷு த்ரிவிஸரீராரம்ஹ:' என்னும் வசனத்தான் அக்கபாதமுனிவரும் 3 வகையே கருமத்தைக் கூறியுள்ளாராதலின் பிரதானத்திற் கருத்தைவைத்து ஸ்ரீ பகவான் கூறியுள்ளார். அதிகாரியானவன் சரீரத்தாலேனும் வாக்காலேனும் மனத்தாலேனும் நியாயரூப கருமத்தையேனும் விபரீதரூபகருமத்தையேனும் தொடங்குவன். எல்லாக்கருமங்கட்குமே யுரைத்த ஐந்துமேகாரணமாம். ஆண்டுச்சுருதி மிருதிரூப சாஸ்திரத்தால் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திராதி தருமம் நியாயமெனப்படும். அவற்றால் நிஷேதிக்கப்பட்ட ஹிம்சாதியதருமம் விபரீதமெனப்படும். ஜீவன ஹேது பூதமாகிய உசுவாசம், நிசுவாசம், நிமேஷம், உன்மேஷம், க்ஷுதம், ஜிரும்பணம், என்பதாதி இயற்கையாய கருமங்களும் பிறவுமாகியவிதி நிஷேத சருவகருமங்களும் தருமா தருமங்களின் காரிய ரூபங்களேயாமாதலின் அவையாவுமே நியாயம் விபரீதம் என்னுமிரண்டிலேயடங்கும். ஆகையால், ஸ்ரீ பகவானது திருவாக்கில் குறைவுண்டாகமாட்டாது. சாத்திரத்திற்கும் சாத்திரங்கூறிய கருமத்திற்கும் மனுடனேயதிகாரி இப்பொருளையுணர்த்துப்பொருட்டு ஸ்ரீபகவான் மனுஷ்யவாசக நர: என்னும் சப்தத்தைக்கூறியருளினர். ஒருடீகையின்கண்ணே இச்சுலோகத்திற்கு இப்பொருள் கூறப்பட்டுளது:— சரீராதிகளானே தொடங்கிய கருமம்:என்னும் வசனத்தானே பின்னர் அச்சருவ கருமங்களின் அதிஷ்டானாதி ஐந்து காரணமாம் எனக்கூறன்மிகமுரணும்? ஈண்டு, 'ஸரீரம்' என்னும் பதத்தானே அதிஷ்டானத்தைக்கவர்க. 'நர:' என்னும் பதத்தானே கர்த்தாவைக்கொள்க. 'வாங்மந:' என்னும் பதத்தானே, கரணங்கவர்க. 'ப்ராரபதே' என்னும் பதத்தானே சேஷ்டையைக்கவர்க. 'ந்யாய்யம்வாவிபரீதம்வா' என்னும் வசனத்தானே தரும அதருமரூபதைவத்தைக் கொள்க. சருவகருமங்களினும் அதிஷ்டானாதியைந்து காரணங்களினுபயோகம் சமானமேயாம். இவ்வைந்துமிலாது எக்கருமமும் தணியப்பெறுதாமாயினும்; சுருதியாதிகளில் விதிநிஷேதரூப சாரீரவாசிகமானசிகமென்னும் மூவகையே கருமம் பிரசித்தமாமாதலின் இதுசாரீரம், என்பதாதியாகக்கூறுதல் அவ்வத்தேகாதிகளின் பிரதானத்தன்மையை யபேக்ஷித்தாமன்றியக்கூற்று அசரீராதி கருமங்களில் அதிஷ்டானாதிகளின் ஹேதுதையை நீக்கமாட்டாதாமென்றறிக; ஆகையால் சிறிதுமாத்திரையும் ஈண்டுமுரணின்றாம். (15)

(அ-கை.) ஆண்டு முன்மொழிந்த அதிஷ்டானாதிகட்கே சர்வகருமங்களின் கருத்தாத்தன்மைகூடலின், அசங்க ஆன்மாவிற்குக் கருமங்களின் கருத்தாத்தன்மையின்றாம். இவ்வாறு ஆன்மாவின்கண்ணே அகர்த்தாத்தன்மை ஞானமும் அதிஷ்டானாதிகளிற் கர்த்தாத்தன்மை ஞானமுமே அவ்வைந்தின் நிரூபணபலமாம்; அப்படியேயிப்போது ஸ்ரீ பகவான் ஆன்மாவைக்கர்த்தாவெனவெண்ணும் மூடனையிகழ்வாயிலாக இக்நான்காவது சுலோகத்தால் கூறியருளுகின்றார்:—

சு-ம். தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மாநம் கேவலம் து ய: ।
பஸ்யத்யக்ருதபுத்தித்வாந்ந ஸ பஸ்யதி துர்மதி: ॥ (16)

ப-ம். 1 தத்ர 2 ஏவம்ஸதி 7 கர்த்தாரம் 6 ஆத்மாநம் 4 கேவலம் 5 து 3 ய:
8 பஸ்யதி 11 அக்ருதபுத்தித்வாத் 12 ந 9 ஸ: 13 பஸ்யதி 10 துர்மதி:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அச்சர்வ கருமங்களினும் அதிஷ்டானாதிகளால் ஐந்தாந்தன்மை யிருக்கப்போதினும் எவன் மூடன் அசங்க உதாசீனமாமேயாகிய ஆன்மாவைக்கர்த்தாவாமாய்க்காண்பனோ, அத்துர்மதி சாஸ்திராசாரியவிவேக புத்தியற்றவனாதலிற்காணான். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறிய தருமாதருமரூப சர்வ கருமங்களினும் கூறிய அதிஷ்டானாதிகளானே ஜன்யத்தன்மை சித்தமாயினும் உண்மையாயசங்க உதாசினரூபமேயாய ஆன்மாவை யெம்மூடன் கருத்தாவாய்க்காண்கின்றனே; அதாவது, சர்வஜடப்பிரபஞ்சத்தை யொளிர்விப்பதும், இருட்புவிளக்க வடிவமும், சுவப்பிரகாச பரமானந்தகனமும், பாதமற்றதும், அசங்க உதாசீனமும், அகர்த்தாவும், அவிக்கிரியமும், அத்விதீயமும், ஆகியுண்மையாயிருப்பினும் ஆன்மா அவித்தையினானே மொழிந்த அதிஷ்டானாதிகளில் பிரதிபிம்பிதமாம்; சூரியனீரில் பிரதிபிம்பித்ததேபோலும். நீர்முதலியவற்றை யொளிர்விக்கும் சூரியன் அவற்றினின்றும் வேறாயினும் ஜலத்தோடு சூரியனுக்குத் தாதாத்மிய பாவத்தைக்கற்பித்து மூடன் ஜலத்தின் சலனத்தால் சூரியன் சலிப்பதேயாக எண்ணுகின்றதேபோல அதிஷ்டானாதிகளை யொளிர்விக்கும் அசங்க அத்விதீய ஆன்மாவிற்கு அதிஷ்டானாதிகளோடு தாதாத்மிய பாவத்தைக்கற்பித்து அவற்றின் கருமத்தை ஆன்மாவின் கண்ணாரோபித்து யானே கருத்தன் எனச் சர்வசாக்ஷி ரூபமாய் ஆன்மாவையும் கிரியைக்காசிரயமாகக் காண்டன் கருத்திதுவாம்:—இரஜ்ஜுவினுண்மை வடிவத்தையுணராமல் சர்ப்பமாய்க் காண்பதேபோல ஆன்மாவினுண்மையாய அசங்க அகர்த்திருரூபத்தைக்காணாமல் அவித்தையினானே அதனைத் தேகாதி கருமாசிரயரூபமாய்க்காணும் மயங்கியோன் இவ்வாறு ஆன்மாவைக்காணினும் கண்டிலன். இரஜ்ஜுவைச் சர்ப்பரூபமாய்க் காணினும் மயங்கியோன் கண்டிலாததேபோல, உண்மையா யசங்க உதாசீன அகர்த்தான்மாவைகர்த்தாரூபமாய்க்காணினும் மயங்கியோன் கண்டிலன். மூடன் மயக்கத்தானே ஆன்மாவை விபரீதமாகவே காண்பன் உண்மைவடிவத்தைக் காணான் என்பதிலேதுவென்னைகொலாமென அர்ச்சுனனுக்குச்சங்கை யுண்டாக ஸ்ரீ பகவான் அவ்விபரீத தரிசனத்தின்கண் ஏதுவைக் கூறியருளுகின்றார். 'அக்ருதபுத்தித்வாத்' என; குருசாஸ்திர உபதேசத்தானே யுண்டாகாத விவேகமதி யெவனுக்கோ அவன் அகிருத புத்தியாம், அத்தகையனாதலினவன் ஆன்மாவை விபரீதமாகவேகாண்பன்; அதாவது, உண்மையா யசங்க உதாசீன அகர்த்தாரூபமாயினும் ஆன்மாவைப் பிராந்தன் கர்த்தாரூபமாகவே காண்பன். கருத்திதுவாம்:—இரஜ்ஜுவினுண்மைவடிவம் சாக்ஷாத்காரமாகாதவரை சர்ப்பமயலை யெவ்வுபாயத்தானும் நீக்கிக்கொள்ள முடியாததேபோலச் சத்தியஞான அநந்த அகர்த்தா அபோக்தா பரமானந்த மூவவத்தையற்ற அசங்கவுதாசீனப் பிரஹ்மம் யானெனப் பிரஹ்மசாக்ஷாத்காரம் குருசாஸ்திர உபதேசத்தானே உண்டாகாதவரை அக்கர்த்திருத்துவமயலை எவ்வுபாயத்தானேனும் நீக்கமுடியாதாம். குருசமீபஞ்சென்று வேதாந்த வாக்கியத்தை விசாரித்து இங்ஙன் பிரஹ்மான்ம சாக்ஷாத்காரத்தையேனுண்டாக்கிக்கொள்ளவில்லை? என அர்ச்சுனனுக்காசங்கை யுண்டாக ஸ்ரீ பகவான் அதன்கண் ஏதுவை யருளுகின்றார். 'துர்மதி:' என விவேகத்தின்றடையாகிய பாவகருமங்களானே மலினாந்தக்கரணமுடையவன் றுர்மதியாவனாதலினானே பிராந்தன் குருவையடைந்து சிரவணஞ்செய்திலன். கருத்திதுவாம்:—பாவ கருமங்களானே அசுத்த புத்தியையுடையவனாதலின் நித்தியா நித்தியவத்து விவேகாதிகளின்மையினானே பிரஹ்மான்ம ஞானத்திற் கயோக்கியனாதலின் அவித்தையான் மயங்கியோன் அகர்த்தாரூபமாய ஆன்மாவையும் கர்த்தாரூபமாய்க் கற்பித்தும், கேவலரூபமாய ஆன்மாவை அகேவலரூபமாய்க் கற்பித்தும், கருமகருத்தாரூபமாகிய அதிஷ்டானாதிகளில் தாதாத்மிய அபிமானத்தானே கருமங்களைத் தியாகஞ்செய்வதில் அசமர்த்தனாகிய தனானே சம்சாரி கருமத்தினதிகாரி தேகபிருத்து அகிருத புத்தியென்பதாய பல பெயர்களையுற்று எல்லாவகையானும் ஜன்மமரண அடைவானே அநிஷ்ட இஷ்ட மிசிரமென்னும் மூவகையாய கரும பலத்தையே அனுபவிப்பன். இத்துணையானே தேகாதிகளினும் வேறாகிய ஆன்மா

வையே கேவலம் கர்த்தாவாகக்காணும் தார்க்கிகனும் அகிருத புத்தியே யென்றுணர்கவென்னும் பொருளு முணர்த்தப்பட்டது. ஒருவாதியோ '𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌤𑍁 𑌯𑌃' என்னும் சுலோகத்திற்கு இப்பொருள் செய்வன்: ஆன்மாக் கேவலம் கருத்தாவன்றும்; மற்றோ முன்மொழிந்த அதிஷ்டானுதிகளோடு சேர்ந்த ஆன்மாக்கர்த்தாவாம். இவ்வாறுண்மையா யதிஷ்டானுதிகளோடு கூடிக்கர்த்தாத் தன்மையையடைவுற்ற ஆன்மாவைக்கேவலம் கர்த்தாவாகக்காண்பவன்; அதாவது அதிஷ்டானுதிகளின் சம்பந்தமின்றிக் கேவலம் ஏக ஆன்மாவையே கர்த்தாவாகக்காண்பவன்; துர்மதியாவன். இவ்வாறுயபொருள் (கேவலம்) என்னும் சப்தப்பிரயோகத்தானே சித்தமாம். இவ்வாதிகளின்பொருள் நல்லதல்லவாம்; ஏனெனின் சர்வக்கிரியைகளுமற்ற அசங்க ஆன்மாவிற்கு அதிஷ்டானுதிகளோடு சேர்க்கையே கூடாதாம். ஜலசூரியனைப்போல அவற்றோடு அசங்க ஆன்மாவிற்கு ஆவித்யகமாகிய கலப்புமையங்கீகரிக்கினே அவ்வாறு சேர்தலான் ஆன்மாவின்கண்ணே அக்கர்த்திருத்துவமும் அதிஷ்டானுதிகள் யாவும் ஆவித்யகமேயாம். இவ்வாறு கற்பித அவற்றோடு ஆன்மாவின் வாஸ்தவ சம்பந்தத்தன்மை சம்பவியாதாம் (கேவலம்) என்னும் சப்தமோ இயற்கையானே சித்தித்த ஆன்மாவின் அசங்க அத்விதீய வடிவத்தை அனுவாதஞ் செய்கின்றது; ஆன்மாவைக் கர்த்தாவென வங்கீகரிப்பவன்பால் துர்மதித்தன்மையையுணர்த்துவானும். ஆகையால் கேவலம் என்னும் சப்தத்தானே வாதியினர்த்தம் சித்திபாதாம். (16)

(அ-கை.) ஆண்டு, '𑌪𑌞𑍍𑌚𑍈𑌤𑌾𑌨𑌿 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋' என்பதாதி 4 சுலோகங்களால் '𑌅𑌨𑌿𑌷𑍍𑌟𑌮𑌿𑌷𑍍𑌟𑌂 𑌮𑌿𑌶𑍍𑌰𑌞𑍍𑌚 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 𑌫𑌲𑌮𑍍 𑌭𑌵𑌤𑍍𑌯𑌤𑍍𑌯𑌾𑌗𑌿𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯' என முற்கூறியருளிய சுலோகத்தின் 3 பாதங்கள் வியாக்கியானித்தருளப்பட்டது. இப்போது '𑌨 𑌤𑍁 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍' என்னும் நான்காவது பாதத்தை ஸ்ரீ பகவான் ஒரு சுலோகத்தானே வியாக்கியானித்தருளுகின்றார்:—

சு-ம். 𑌯𑌸𑍍𑌯 𑌨𑌾𑌹𑌂𑌕𑍃𑌤𑍋 𑌭𑌾𑌵𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 ।
𑌹𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 𑌸 𑌇𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌨 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥ (17)

ப-ம். 1 𑌯𑌸𑍍𑌯 4 𑌨 2 𑌅𑌹𑌂𑌕𑍃𑌤𑌃 3 𑌭𑌾𑌵𑌃 6 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 5 𑌯𑌸𑍍𑌯 7 𑌨 8 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 12 𑌹𑌤𑍍𑌵𑌾 13 𑌅𑌪𑌿 9 𑌸𑌃 10 𑌇𑌮𑌾𑌨𑍍 11 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 14 𑌨 15 𑌹𑌨𑍍𑌤𑌿 16 𑌨 17 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வறிஞனுக்கு யான் கருத்தாவென்னும் விருத்தியுண்டாகவில்லையோ, மதிபற்றுறுவதில்லையோ அவ்வறிஞனிவ்வுலகங்களைக் கொன்றும் கொல்வதில்லை பந்திக்கப்படவுமாட்டான். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன் சுலோகத்தில் கூறிய துர்மதியினும் முற்றினும் விலக்ஷண அதிகாரி பூர்வ புண்ணிய கருமத்தானே விவேக விரோதியாய பாவ கருமங்களை யழித்து விவேக வைராக்கிய சமாதிஷட்சம்பத்து முமுக்ஷுதையென்னும் நான்கு சாதனங்களையடைந்து குருசாஸ்திர உபதேசத்தானே உண்டாய அகர்த்தா, அபோக்தா, சுவப்பிரகாச, பரமானந்த, அத்விதீயப் பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்ம சாக்ஷாத்கார முற்றவனுக்கு அகங்காரபாவம் நஷ்டமாம்; அதாவது தத்வ சாக்ஷாத்காரத்தானே காரியசகித அஞ்ஞானம் பாதிதமாகவே யான் கருத்தாவென்னும் விருத்தி ஒருகாலு முண்டாகாதாம். அல்லது, '𑌯𑌸𑍍𑌯 𑌨𑌾𑌹𑌂𑌕𑍃𑌤𑍋 𑌭𑌾𑌵𑌃' என்பதற்கு இவ்வேறு பொருள்கொள்க:—தத்துவ வேத்தாவி

யாய ஆன்மாவின் சாக்ஷாத்காரமே பரமார்த்த சந்யாசமாம். இது ஜனகன் அஜாதசத்துரு முதலிய தத்துவவேத்தாக்களாகிய கிருகஸ்தர்களிடத்து மிருந்தது. ஆகையாலவர்களும் பரமார்த்த சந்யாசமுடையவரேயாவர். ஜனகாதி கிருகஸ்தஞானிகளிடத்தில் அவரது வருணாசிரம கருமங்காணவந்ததாயினும் தத்துவவேத்தாக்களாகிய பரமஹம்ச சந்யாசியினிடத்தில் நுகர்வினைவயத்தால், பாதிதானுவிருத்தியானதல் அன்னியாது கற்பனையினாலதல் பிக்ஷாடனாதிகள் பிரதீதியாவதேபோலப் பிரபல நுகர்வினைவயத்தால் ஒடியிருவகையினால் ஜனகாதிகளிடத்தில் கருமங்களின்றரிசனம் முரணின்றாம். இதனானே ஆன்மஞான பலபூதவித்வத் சந்யாசஞ்சொல்லப்படும். சாதன பூதவிவிதிஷா சந்யாசமோ முதலிவ்வாறுண்டாகாதாயினும் ஞானத்தின்பின் இவ்வாறேயாம். (17)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ மதிஷ்டானாதி ஐந்தும் சர்வ கருமங்களின் ஹேதுவெனக் கூறியருளி ஆன்மாவிற்குச் சர்வ கருமங்களின் பரிசமின்மை கூறியருளப்பட்டது; இப்போது முன்னருளிய பொருளையே ஞானஞேயாதிப் பிரக்கிரியையாகவருணிப்பதுடன் திரைகுண்யபேத வியாக்யானத்தானே முன்னினும் விலக்ஷண முறையாக வருணித்தருளுகின்றார் :—

சு-ம். 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾 ।
𑌕𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑍍𑌤𑍇𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌃 ॥ (18)

ப-ம். 1 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 2 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 3 𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌾 4 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 5 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾 6 𑌕𑌰𑌣𑌂 7 𑌕𑌰𑍍𑌮 8 𑌕𑌰𑍍𑌤𑌾 9 𑌇𑌤𑌿 10 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 11 𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஞானஞேய பரிஞாதாவென்னும் மூன்றும் கர்மப் பிரவர்த்தகங்களாம்; கரணம் கர்மங்கர்த்தா என்னும் மூன்றும் கர்மாசிரயங்களாம். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வஸ்துவின் உண்மைவடிவத்தை யொளிர்விப்பது ஞானமாம்; அதாவது காட்சியாதிப் பிரமாணங்களானே ஜன்னிய மாயகுட முதலியவற்றின் பிரகாசவடிவக் கிரியை ஞானமென்பதாம். ஞானரூபக்கிரியைக்குக் கர்மபூதமாய கடாதிகள் ஞேயங்களாம். ஞானரூபக்கிரியைக்கு ஆசிரயபூதமும் அந்தக்கரணரூப உபாதியானே யினிது கற்பிக்கப்பட்டதும், ஆகிய போக்தா பரிஞாதாவாம். அம்மூன்றும் சமுச்சய பாவத்தையடைந்தே இஷ்டா நிஷ்டரூப கருமங்களைத் தொடங்கும். சமுச்சயமாகாமல் எக்கருமத் தொடக்கமுமின்றாம்; ஏனெனின், ஞேயஞாதாக்களிருந்தபோதினும் ஞானமிலதாயவழி பிரவிருத்தி யுண்டாகாதாமாதலின் பிரவிருத்தியின்கண்ணே அந்த ஞானத்திற்கு அவசியம் ஹேதுத்தன்மையை யங்கீகரிக்கவேண்டும். ஞான ஞாதாக்களிருந்தபோதினும் தேசகாலத்தானே ஞேயந்தடையாயின் பிரவிருத்தி யாகாதாதலின் அதன்கண் ஞேயத்தையுமின்றியமையாது ஹேதுவெனக் கொள்ளவேண்டும். துயிலில் சமஸ்காரரூப ஞானஞேயங்களிருந்தபோதினும் ஞாதாவின்மையின் பிரவிருத்தி யுண்டாகாதாதலின், அதன்கண் ஞானத்தையும் ஹேதுவாக அவசியமங்கீகரிக்கவேண்டும். ஆகையான் மூன்றும் ஒன்று சேர்ந்தே சர்வ கருமங்களையுந் தொடங்கும். இப்பொருளை ஸ்ரீ பகவான் ‘𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 𑌕𑌰𑍍𑌮𑌚𑍋𑌦𑌨𑌾’ என வருளினர். சோதனையென்பது பிரவர்த்தகமாம்; அதாவது, ஞானாதி மூன்று மொருங்கு சேர்ந்தே கருமப் பிரவர்த்தகமாம். பூர்வமீமாம்சையின்கண்ணே கிரியையில் பிரவர்த்தக வசனத்தையே சோதனையெனப்படுமாயினும், ஈண்டு ஞானாதிகளிடத்தில் வசனரூபத்தன்மை சம்பவியாதாமாதலின் வசனத்தன்மையைப் பரித்தி

யாகித்துக் கிரியையின் பிரவர்த்தக மாத்திரத்தில் சோதனை சப்தத்திற்கு இலக்கணைகொள்க. கொளவே இப்பொருள் துணியப்பெறும்:—அனான்ம பதார்த்தத்தின்கண்ணே பிரேரணீயத்தன்மையும் பிரேரகத்தன்மையுமாம். அசங்க ஆன்மாவின்கண்ணே அவ்விரண்டுமின்றாம். இத்துணையானே 'ஜ்ஞாநம்....பரிஜ்ஞாதா' என்னும் பூர்வார்த்தப்பொருளாயது. இப்போது 'கரணம்....த்ரிவித⁴:' என்னு முத்தரார்த்தப்பொருள் வருணிக்கப்படும்; எதன் வியாபாரத்தின்பின்னர்க் கிரியையின் சித்திபாமோ அது காணமாம். அது பாகியாந்தர பேதத்தாலிருவகையாம். சுரோத்திராதிகளோ பாகிய கரணமாம்; மனாதிகளோ அந்தக்கரணமாம். கர்த்தாவின் கிரியைபால் இசையத்தக்க இஷ்டகாரகம் கருமமாம். அது உற்பாத்தியம், ஆப்பியம், சம்ஸ்காரியம், விகார்யம் என்னும் வேற்றுமையானே நான்கு வகையாம். அவற்றுள் உற்பத்திக்கு யோக்கியமாயது உற்பாத்தியமாம்; அல்லது, யாது முன்னிராது பின்னுண்டாகின்றதோ அது உற்பாத்தியமாம். பூர்வம் சித்தமாய பிராப்தமாவது ஆப்பியமாம். குணங்கொள்ளன் மலந்தள்ளல் வடிவ சமஸ்காரயோக்கியமாயது சமஸ்கார்யமாம். பூர்வ அவஸ்தையைப் பரித்தியாகித்து அவஸ்தாந்தர அடைவுவிகாரமாம், அதை யடைவது விகார்யமாம். இதர காரகங்களால் அப்பிரயோஜ்யமும், சகல காரகங்களின் பிரயோஜகமாயதும் கர்த்தாவாம். அஃதீண்டு சித்த சித்தின் கிரந்திரூபமாய்க்கொள்க. காணங்கருமம் கருத்தா மூன்றுமே பரஸ்பரம் சமுச்சய பாவத்தையடைந்து கரும சங்கிரகமாம்; அதாவது கருமங்களினாசிரயரூபமும். காணங் கர்மங் கர்த்தாவென்னும் வசனத்தினீற்றிலிருக்கும் என்னு மென்னுஞ் சப்தத்தானே சம்பிரதானம், அபாதானம் அதிகரணம் என்னு மூன்றுகாரகங்கட்கும் காணாதி மூன்றிலே உள்ளடக்கமெனக்கொள்க. நன்மேன்மை மதியானே எவர்க்கு வத்தியப்படுமோ அது சம்பிரதானமாம்; வேதவேத்தாவாகிய மறையவனுக்குக் கோக்கொடுத்தல்போலாம், மறையவன் சம்பிரதானமாம். சம்யோகவாயிலாய் விபாகத்தில் அவதியாதோ அஃதே அபாதானமாம்; இமாசலத்தினின்றும் ஸ்ரீ கங்காதேவி யிறங்குதல்போலவாம், பர்வதம் அபாதான காரகமாம். ஆதாரமென்பது அதிகரணமாம். இவ்வாறு கருத்தா, கருமம், காணம், சம்பிரதானம், அபாதானம், அதிகரணம், என ஆறுகாரகங்கள் வியாகரணத்திற் பிரசித்தமாம். சம்பிரதானாதி மூன்றையும் கர்த்தாதிகளிலடக்கி ஸ்ரீ பகவான் கர்த்தாதி மூன்றைக் கூறியருளினர். இவ்வாறு மூவகைத்தகைமை யடைந்த காரகஷட்கமே சர்வக்கிரியைகளினாசிரயமாம். கூடஸ்த ஆன்மா எக்கிரியைக்கு மாசிரயமாகாதாம். ஆகையால் இச்சுலோகத்தாலிது துணியப்பெறும், யாது யாது கருமப்பிரேரகமாமோ, ஆசிரயமாமோ அவையாவுமே காரகரூபமேயாம், திரிகுணான்மகமேயாம். ஆன்மாவோ காரக பாவமற்றதும் முக்குணங்களற்றதுமாமாதலின், சர்வ கருமங்களின் பரிசமற்றதாம். (18)

(அ-கை.) ஈண்டுப் பூர்வ சுலோகத்தின்கண்ணே ஞானாதி காணாதி இருமும்மைபருளப்பட்டது. இப்போது, அவற்றில் திரிகுணரூபத்தன்மை யவசியம் கூறத்தக்கதாமாதலின் ஸ்ரீ பகவான் அவற்றைத் தொகுத்துக் கூறியருளியவற்றில் திரிகுணரூபத்தன்மையின் பதிஞ்ஞையைச் செய்தருளுகின்றார்:—

சு-ம். ஜ்ஞாநம் கர்ம ச கர்த்தா ச த்ரிதை⁴வ கு³ணபே⁴த³த: ।
ப்ரோச்யதே கு³ணஸங்க்²யாநே யதா²வச்ச்²ருணு தாந்யபி ॥ (19)

ப-ம். 2 ஜ்ஞாநம் 4 கர்ம 3 ச 6 கர்த்தா 5 ச 8 த்ரிதா⁴ 9 ஏவ 7 கு³ணபே⁴த³த: 10 ப்ரோச்யதே 1 கு³ணஸங்க்²யாநே 13 யதா²வத் 14 ஶ்ருணு 11 தாநி 12 அபி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சாங்கிய சாஸ்திரத்தின்கண்ணே ஞானமும் கருமமும் கர்த்தாவும் சத்துவாதி முக்குணபேதத்தானே மூவகைபெயாகுமென்ப; அந்த ஞானாதிகளையும் அவற்றின் வேற்றுமைகளையும் நீ யுள்ளபடி கேட்பாயாக.()

(வி-ம்.) ஈண்டு, 'ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா' என முன் வசனத்திற் கூறப்பட்ட பிரத்யக்ஷாதிப் பிரமாண ஜன்னிய வஸ்துவின் பிரகாசரூப அந்தக்கரணவிருத்திரூப ஞானமே ஈண்டு ஞானசப்தத்தாற் கவரத்தக்கதாம். வஸ்துவில் ஞேயத்தன்மையுண்டாதல் ஞானரூப உபாதியாலாயதாம் ஞானமின்றியாகாததாமாதலின் மொழிந்த ஞேயத்திற்கு ஞானத்தின்கண்ணே யடக்கமாம். கரும சப்தத்தானே யாகாதிரூபக்கிரியையைக்கவர்க. அது 'த்ரிவித: கர்மஸங்க்ரஹ:' என்பதில் கருமசப்தத்தானே கூறப்பட்டதாம். 'ஜ்ஞாநம் கர்ம ச' என்பதிலிருக்கும் சகாரத்தானே கூறிய கருமம் கரணமென்னு மிரண்டுகாரகங்களும் கிரியையின்கண்ணே யுள்ளடக்கமென்றறிக; என்னை, வத்துவின்கண்ணே காரகத்தன்மை கிரியைவடிவ உபாதியாலாயதாம், கிரியையின்றி யுண்டாகாதாமாதலின் கூறியவுள்ளடக்கம் பொருத்தமுடையதேயாம். பூர்வ சுலோகத்தில் 'கரணம் கர்ம கர்தேதி' என்பதில் கூறப்பட்ட கிரியையையுண்டாக்குவது கர்த்தாவாம் அதே கர்த்தாவை ஈண்டுக் கர்த்தா சப்தத்தானே கவர்க. 'கர்தா ச' என்பதிலிருக்கும் சகாரத்தானே கூறிய பரிஞாதாவை இக்கர்த்தாவின்கண்ணே யடக்கமெனவறிக; கரணங் கருமமென்னு மிரண்டு காரகங்களைப்போலக் கர்த்தாவின் கண்ணும் கிரியையுபாதிகத்தன்மை துல்லியமேயாமாதலின் அவ்விரண்டைப்போலக்கர்த்தாவையும் தனியே கூறுதல் கூடாது; என்றாலும் கர்த்தாவின் கண்ணே தனியாகத் திரிகுணத்தன்மை ரூபக்கூற்றுக்குத் தார்க்கிகர்கள் மயலாற்கற்பித்த ஆன்மத்தன்மையை நீக்கும் பொருட்டாம்; அவரோ கர்த்தாவையே யான்மாவென்பர். ஞானாதி மூன்றும் குண சங்கியானத்தில் சத்துவாதி வேற்றுமையானே சாத்விகம் இராஜசம் தாமசம் என மூவகையாகக் கூறப்பட்டுளது. சத்துவாதி முக்குணம் காரிய வேற்றுமையானே பிரதிபாதிக்கப்பட்டுளது எந்நூலின்கண் அது குணசங்கியானமாமோ; அத்தகையது கபில முனிவர் கூறிய சாங்கிய சாஸ்திரமாம். அதன் கண்ணே இவை கூறப்பட்டிருக்கின்றன. ஈண்டு, 'த்ரிதைவ' என்பதிலிருக்குந் தேற்றம் சாத்விகாதி முப்பேதங்களை யொழித்து வேறு நான்காவது வகையை நீக்கற்பொருட்டாம். கபிலமுனிவர் கூறிய சாங்கிய சாஸ்திரம் பரமார்த்தப் பிரஹ்மத்தின் ஒருமையின்கண்ணே பிரமாண மாகாதாம்; என்னை, ஆங்கு நானா ஆன்மாவே அங்கீகாரமாதலின். எனினும் சாங்கிய சாஸ்திரம் அபரமார்த்தரூப சத்துவாதி குணங்களின் கௌணபேத நிரூபணத்தில் வியாவகாரிகப் பிரமாண பாவத்தையடையும். இதனானே கூறப்படும் பொருளைத் துதிக்கும்பொருட்டு ஸ்ரீ பகவான் 'ப்ரோச்யதே குணஸங்க்யாநே' என்பதைக் கூறியருளினர்; அதாவது, ஞானாதிகளின் மூவகைத்தன்மை கேவலம் இக்கீதா சாஸ்திரத்திலே பிரசித்தமன்றாம்; மற்றோ, கபில முனிவர்கூறிய சாங்கிய சாஸ்திரத்தின் கண்ணும் பிரசித்தமாம். இவ்வாறு கூறப்புகும் அர்த்தத்தைத் துதித்தருளும்பொருட்டு ஸ்ரீ பகவான் அவ்வசனத்தைக்கூறியருளினர். ஞானாதிகளையும், சத்துவாதி குணங்களாலாக்கப்பட்ட ஞானாதிகளின் பேதத்தையும், உள்ளபடியே கேட்பாயாக: அதாவது, சாஸ்திரத்தில் அவற்றின் சொரூபங்கூறப்பட்டவாறே சிரவணிக்கும்பொருட்டு நீ சாவதானனாவாயாக. முன்னர் 14 வதத்தியாயத்திலும் 17 வதத்தியாயத்திலும் ஸ்ரீ பகவான் சத்துவாதிகளையும் அவற்றாலாயசாத்விகாதிபேதங்களையும் கூறியருளி மீண்டுமீண்டுங் கூறியருளுவதானே கூறியது கூறலென்னுங்குற்றமாமெனினும். இவ்விதவியத்தையானே அத்தோடமனுகாதாம். பூர்வம் 14 வதத்தியாயத்திலோ 'தத்ர ஸத்வம் நிர்மலத்வாத்' என்பதாதி வச

னங்களானே சத்துவாதி குணங்களில் பந்தஹேதுத்தன்மையின் பிரகாரம் நிரூபித்தருளப்பட்டது, குணாதீதனுக்கு ஜீவன் முக்தத்தன்மையை நிரூபித்தருளும் பொருட்டாம். 17 வதத்தியாயத்திலோ 'யஜந்தே ஸாத்விகா தேவாந்' என்பதாதி வசனங்களானே சத்துவாதி குணங்கள்செய்த மூவகைச்சுபாவத்தை நிரூபித்தருளியதாலிப்பொருள் துணியப்பெறும்: அதிகாரி அசுரரூப ராஜசதாமச சுபாவத்தைப் பரித்தியாகித்துச் சாத்விக ஆகாராதிகளைச் சேவித்துத்தைவரூப சாத்விக இயற்கையே சம்பாதிக்கத்தக்கதென்பதாம். இப்பதினெட்டாவது அத்தியாயத்திலோ இயற்கையானே குணாதீத அசங்க ஆன்மாவிற்குக்கிரியைகாரகம் பலம் என்னும் மூன்றோடும் சிறிதுமாத்திரையும் சம்பந்தமின்றாம். இப்பொருளையுணர்த்தியருளும்பொருட்டுக்கிரியாகாரகாதியாவற்றிற்கும் திரிகுணரூபத்தன்மையேயாம்; இதனினும் வேறாக யாதொருவடிவமும் அவற்றிற்கின்றாம். எதனால் இக்கிரியாகாரகாதிகட்குஆன்மாவின் சம்பந்தித்தன்மையாமோ என்னும் பொருள் கூறியருளப்பட்டது. இதுவே மூன்றத்தியாய வசனங்களில் விசேஷத்தன்மையாமாதலின் ஈண்டுக்கூறியது கூறலுண்டாகாதாம். (19)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் ஞானம் கர்த்தாகருமம் என்னும் மூன்றற்கும் சாத்விகாதி மூவகைத்தகைமை அறியத்தக்கதெனப் பிரதிஞ்ஞை செய்தருளப்பட்டது; இப்போது முதலில் ஞானத்திற்கு மூவகைத்தன்மை 3 சுலோகங்களால் ஸ்ரீ பகவான் நிரூபித்தருளுவர்; அதன் கண்ணும் முதலில் அத்வைத ஆன்மவாதிகட்குச் சாத்விக ஞானத்தைக் கூறியருளுகின்றார்.—

சு-ம். ஸர்வபூதேஷு யேநைகம் பாவமவ்யயமீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ஸாத்விகம் ॥ (20)

ப-ம். 2 ஸர்வபூதேஷு 7 யேந 4 ஏகம் 6 பாவம் 5 அவ்யயம் 8 ஈக்ஷதே 3 அவிபக்தம் 1 விபக்தேஷு 9 தத் 10 ஜ்ஞாநம் 12 வித்தி 11 ஸாத்விகம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரஸ்பர பேதமுடைய சர்வபூதங்களில் யாண்டும் வியாபக ஏக அவ்யய சத்தாரூப பாவத்தை எவ்வுணர்வாற் சாக்ஷாத் கரிப்பனோ அவ்வுணர்வைச் சாத்விக ஞானமென்றறிதி. (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வியாகிருத, ஹிரண்யகர்ப்ப, விராட்டு, என்னும் நாமங்களையுடைய காரண சூக்ஷ்ம தூலரூப சமஷ்டிவியஷ்டிவடிவ சர்வ பூதங்களும் விபக்தங்களாம்; அதாவது, வேறுவேறு நாமரூபங்களானே பரஸ்பரம் வியாவர்த்தியமும் நாசமுமாகிய உற்பத்தி நாசமுடைய திருசியவர்க்கரூப சர்வ பூதங்களில் சத்தைவடிவ பாவத்தை வேதாந்த வாக்கியங்களின் விசாரஜன்னிய அந்தக்கரண விருத்திரூப ஞானத்தானே அதிகாரி சாக்ஷாத்கரிப்பன்; அதாவது, அச்சர்வ பூதங்களில் பரமார்த்த சத்தைவடிவ சுவப்பிரகாச ஆனந்த ஆன்மாவை எவ்வுணர்வாற் சாக்ஷாத்கரிக்கலாமோ என்பதாம். சத்தையாகிய பாவம், ஒன்றாம், அதாவது, சஜாதீய விஜாதீய சுவகத பேதங்களற்றமையின் அத்விதீயரூபமாம். அவ்யயமும் ஆம்; அதாவது உற்பத்தி விநாசாதி சர்வ விகாரங்களுமற்றதும் அதிருசியமுமாம். அவிபக்தமுமாம்; அதாவது, சர்வஜட பதார்த்தங்களின் அதிஷ்டான ரூபத்தாலும், சர்வகற்பித பதார்த்தங்களின்பாத அவிபக்தரூபத்தாலும் யாண்டும் வியாபகமாம், அத்தகைய அத்விதீய ஆன்மாவையதிகாரி வேதாந்தவாக்கிய ஜன்னிய ஞானத்தாலே சாக்ஷாத்கரிப்பன், பிரமையாகிய பிரபஞ்சத்தின் பாதக ஆன்ம ஞானத்தை சாத்விக ஞானமென்றுணர்தி. இவ்வத்விதீய ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தினும் வேறாகிய சத்துவத்தின் கண்ணதாக தரிசனமுளவோ அவையாவுமே இராஜசமாதலினாலும் தாமசமாதலினாலும் சம்

சாரத்தின் காரணமேயாதலின் அந்தத்வைத தரிசனத்தில் ஒருகாலும் சாத்விகத் தன்மையுண்டாகாதாம். (20)

(அ-கை.) இப்போது இராஜச ஞானத்தின் சொரூபம் வருணித்தருளப் படுகின்றது.

சு-ம். வஉ௰க்ஷெ௩ ந து யஜ்ஞாநம் நாநாஹாவாநு௩௰ஷ்வியாநு ।
வெத்தி ஸவெஃஷு ஹூதெஷு தஜ்ஞாநம் விஷி ராஜஸம் ॥ (21)

ப-ம். 2 வஉ௰க்ஷெ௩ந 1 து 7 யக 8 ஜ்ஞாநம் 6 நாநாஹாவாநு 5 வஉ௰ஷ்வியாநு 9 வெத்தி 3 ஸவெஃஷு 4 ஹூதெஷு 10 தக 11 ஜ்ஞாநம் 13 விஷி 12 ராஜஸம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் பரஸ்பர பேதத்தானேயிரா நின்ற தேகாதி சர்வ பூதங்களில் பரஸ்பர விலக்கண நானு ஆன்மாக்களின் ஞானத்தை நீ இராஜசமென்றறிவாய். (21)

(வி-ம்.) ஈண்டு 'வஉ௰க்ஷெ௩ந து' என்னும் வசனத்திலிருக்கும் துசப்தம் முன் சுலோகத்திற் கூறியருளிய சாத்விக ஞானத்தினும் இந்த இராஜச ஞானத்தின்கண்ணே விலக்ஷணத்தன்மை யுணர்த்தியருளும் பொருட்டாம். அவ்விலக்ஷணத்தன்மையிதுவாம்:—பரஸ்பர பேதத்தானே யிராநின்ற தேகாதிக சர்வ பூதங்களில் எஞ்ஞானம் பிருத்தக்வித நானுபாவங்களைக்காணுமோ; அதாவது, தேகந்தோறும் சுகித்வ துக்கித்வாதிரூபத்தால் பரஸ்பர விலக்ஷண வேறு வேறு ஆன்மாக்களை எஞ்ஞானங்காணுமோ. கருத்திதுவாம்:—இந்த லோகத்தில் சிலர் சுகிகளாவர், சிலர் துக்கிகளாவர், சிலர் பண்டிதர், சிலர் மூர்க்கர் என்பதாதி அநேகவகை விலக்ஷணத்தன்மை காணவருகின்றது. ஒருகால் சர்வ தேகங்களிலும் ஒரே யான்மா இருப்பின் ஒரு பிராணி சுகியாயின் யாவருஞ் சுகியாகவேண்டும்; ஒரு பிராணி துக்கியாயின் யாவருந்துக்கியாகவேண்டும்; ஆனு லவ்வாறு காணவருவதில்லையாதலின் சர்வ தேகங்களிலும் ஏக ஆன்மாவில்லையாம்; மற்றூ, தேகந்தோறும் வேறுவேறு ஆன்மாவாம். இவ்வாறு குதர்க்கங்களாலுண்டாய ஞானம் தேகந்தோறும் வேறுவேறு ஆன்மாவைக் காண்டலின் அது இராஜசமாம். ஈண்டு 'யஜ்ஞாநம் வெத்தி' இவ்வசனஸ்தானத்தில் 'யெநஜ்ஞாநெநவெத்தி' இவ்வகையாயே கூறல் தகுதியாம்; ஆயினும் 'யஜ்ஞாநம் வெத்தி' என ஸ்ரீ பகவான் கூறியருளியது அந்த ஞானரூப கரணத்தின்கண் கர்த்திருத்துவ உபசாரத்தால் ஆம் 'ஊயாம் ஸிவஅஂதி' என்னும் வசனம் பாககாணரூப காஷ்டங்களில் கர்த்திருத்துவ உபசாரத்தைக்கூறும்; அல்லது அவ்வுணர்வு கர்த்தாரூப அகங்காரத்தின் விருத்திரூபமாமாதலின் கர்த்தாரூப அகங்காரத்திற்கு அவ்விருத்திரூப ஞானத்தோடு அபேதத்தைக் கருதியருளி ஸ்ரீ பகவான் 'யஜ்ஞாநம் வெத்தி' என்பதைக்கூறியருளினர். இவ்வசனத்தில் பூர்வம் ஞானபதத்தையருளி, தஜ்ஞாநம்' என்பதில் மீண்டும் ஞானபதங் கூறியருளியது, ஆன்மாவின் பேத ஞானத்தையும் அநாத்மாவின் பேத ஞானத்தையும் அறிவிக்குமாதலின் இப்பொருள் துணியப்பெறும். தேகந்தோறும் ஆன்மாக்களின் பரஸ்பர பேதம், ஆன் மாக்கட்கீசுர பேதம், ஆன்மாவிற்கும் அசேதனவர்க்கங்கட்கும் பேதம், ஈசுர அசேதனவர்க்கங்கட்கும் பேதம், அசேதனவர்க்கங்கட்குப் பரஸ்பர

